REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: கார்த்திகை 23உ சனி (8—12—56) ★ ★ வெளியூர்: கார்த்திகை 24உ ஞாயிறு (9—12—56) [இதழ் 155

## மாநிலப் புது அமைப்பிற்காக ரூ. 11,37,00,000 செலவாயிற்றும்!

மாநிலப் புது அமைப்பு வேலைகளுக்காக சர்க்காருக்கு ரூ. 11 37 கோடி செலவாகியிருப்பதாகக் கூறப்படுகிறது.

இந்த நடைமுறை நிதி ஆண்டுக்காக மக்கள் சபையில் நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி தாக்கல் செய்துள்ள துணைத் திட்டத்தில், உப மானியக் கோரிக்கையாக இந்தத் தொகையைக் கேட்டிருக்கிறார். உபமானியக் கோரிக்கை மொத்தமாக ரூ. 40 கோடி கேட்கப்பட்டுள்ளது என்றும், இதில் ரூ 17·56 கோடி ரெவினியூ செலவினங்களுக்கும் ரூ. 22·44 கோடி முதலீட்டுச் செலவினங்களுக்குமாகும்.

### மறைந்த தலைவருக்கு:

# ஐந்து இலட்சம் மக்கள் இறுதி மரியாதை

## கடைசி விருப்பத்தை நிறைவேற்ற பல்லாயிரம் தாழ்த்தப்பட்ட மக்கள் உறுதிமொழி

### பம்பாயில் சோகக் காட்சிகள்

டாக்டர் அம்பேத்காருக்குத் தங்களின் இறுதிமரியாதையையும் வணக்கங்களையும் தெரிவித்துக்கொள்வதற்காக சுமார் 5-இலட்சம் மக்கள் பம்பாய் கடற்கரையில் திரண்டிருக்கின்றனர்.

'வரும் டிசம்பர் 16-ந்தேதி பம்பாய் வந்து, பல்லாயிரக் கணக்கான தாழ்த்தப்பட்டவர்கள், புத்த மதத்தைத் தழுவிக் கொள்ளும் விழாவினை ஏற்பாடு செய்யவிருந்தார் அம்பேத்கார்; ஆனால் அதற்குமுன் அவர் நம்மிடமிருந்து பிரிக்கப்பட்டுவிட்டார்; ஆனாலும், அவரது விருப்பத்தை நாம் பூர்த்திசெய்ய வேண்டாமா?' என்று மராட்டிய தாழ்த்தப்பட்டோர் சங்கத் தலைவரான ஆர். கே. கெய்க்வாத் கூடியிருந்தோரைக் கேட்டபோது, 50,000-த்திற்கும் அதிகமான தாழ்த்தப்பட்ட மக்கள் தங்கள் கரங்களை உயர்த்தி, புத்த மதத்தைத் தழுவிக்கொள்ள தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர்

#### தகனக்கிரியை

கடற்கரையில், டாக்டர் அம்பேத்காரின் சடலம் தகனம் செய்யப்பட்டபோது கூடியிருந்த பலரும் கண்ணீர் வடித்தனர்.

அம்பேத்காரின் குமாரரான யஷ்வந்த் ராவ், சந்தனக் கட்டைகளின்மேல் வைக்கப்பட்டிருந்த தந்தையின் சடலத்திற்கு, புத்தபிட்சுக்களின் மந்திர உச்சாடனத்திற்கிடையே தீமூட்டியிருக்கிறார்.

#### ஊர்வலம்

டில்லியிலிருந்து பம்பாய்க்கு விமான மூலம் கொண்டுவரப்பட்ட டாக்டர் அம்பேத்காரின் சடலம், அவரது இல்லத்திலிருந்து அலங்கரிக்கப்பட்ட இரதம் ஒன்றில் வைத்து, மலர் மாலைகளுக்கிடையில் அலங்கரிக்கப்பட்டு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது.

ஊர்வலத்தில் சுமார் 4 இலட்சம் பம்பாய் மக்கள் கலந்துகொண்டிருக்கின்றனர்.

வழிநெடுகக் கூடியிருந்தோர் மலர் தூவி, தங்கள் இறுதி மரியாதையைத் தெரிவித்துக் கொண்டனர்.

கறுப்பு உடை தரித்தவர்களாய் பல்லாயிரக்கணக்கான மக்கள், அவ்வப்போது 'புத்தம் சரணம் கச்சாமி' என்று ஒலித்துக் கொண்டே வந்தனர்.

#### பள்ளிகள், கடைகள் அடைப்பு

டாக்டர் அம்பேத்காரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் வடக்கு பம்பாயில் எல்லாக் கடைகளும் பள்ளிகளும். இதர நிறுவனங்களும் மூடப்பட்டிருந்தன.

சுமார் 20,000 துறைமுகத் தொழிலாளர் உட்பட எண்ணற்ற தொழிலாளர்களும், தாழ்த்தப்பட்ட மக்களும் தங்களது பெருமைக்குரிய தலைவருக்கு இறுதி மரியாதை செலுத்துவதற்காக, தொழிற்சாலைகளைவிட்டு வெளியேறி ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

பம்பாயில் உள்ள பல கட்சித் தலைவர்களும் டாக்டர் அம்பேத்காரின் இல்லம் சென்று, சடலத்திற்கு மாலைகள் அணிவித்துத் தங்கள் இறுதி மரியாதையைத் தெரிவித்துக் கொண்டனர்.

## ஐ. நா. செலவு: இந்தியாவின் பங்கு!

ஐ நா.-சபையில் இந்தியா உறுப்பினராயிருப்பதற்கு, ஐ நா. செலவுகளுக்குத் தன் பங்காக 1956-ம் ஆண்டிற்காக 13,39,360 டாலர்—அதாவது, ரூ. 63,77,800 தரவேண்டியுள்ளது என்றும், இதில், ரூ.- 45,69,800 அசல் வரவு செலவுத் திட்டத்திலேயே கோரப்பட்டிருக்கிறதுஎன்றும், துணைத் திட்டத்தில் எஞ்சிய ரூ. 18,08 லட்சம் மட்டுமே கோரப்படுகிறது என்றும் கூறப்படுகிறது.

## 4 இலட்சம் போலி 'பங்கீட்டு அட்டை'கள்

### 'உணவுப் பஞ்சத்'திற்குக் காரணமாயிருந்தனவாம்

ம. பி. கவர்னர் கண்டுபிடிப்பு

இந்தூர், டிச 7—

"நடந்த யுத்தத்தின்போது உண்மையிலேயே இந்தியாவில் உணவுப் பற்றாக்குறை, பஞ்சம் இருக்கவில்லை; இந்தப் பஞ்சம், செயற்கையாகக் கற்பிக்கப்பட்டது"

என்று, ம. பி. கவர்னர் டாக்டர் பட்டாபி சீதாராமையா கூறியிருக்கிறாராம்.

ஏராளமான போலி 'ரேஷன் கார்டு'கள் மூலம் இந்த செயற்கைப் பஞ்சம் கற்பிக்கப்பட்டு, திருட்டுத் தனம் நடைபெற்றது என்றும் அவர் கூறியிருக்கிறாராம்!

டில்லியில் மட்டும் 4 இலட்சம் போலி 'ரேஷன் கார்டு'கள் உலவின என்றும்கூறி, அவர் தமது வாதத்தை நிலைநாட்ட முயன்றாராம்!

வர்த்தகத் துறையில் நிலவும் ஒழுங்கீனங்களைத் தொடர்புடையோர் கைவிட்டுவிட வேண்டும் என்றும், யுத்தம் முடிந்து நெடுநாட்களாகியும் யுத்த காலத்தில் தோன்றிய 'திருட்டுப் பழக்கங்கள்,' இன்னும் ஒழியவில்லை என்றும் அவர் கூறினாராம்!

## பொதுத் தேர்தல்கள்

கமிஷன் சிபாரிசுக்கு டில்லி சம்மதம்

புதுடில்லி, டிச 7—

வரும் பிப்ரவரி 28 முதல் மார்ச் 14-ந் தேதிக்குள், பொதுத் தேர்தல்களை நடத்திவிடலாம் என தேர்தல் கமிஷன் செய்த சிபாரிசை ஏற்றுக்கொள்ளலாம் என்று மத்திய சட்ட மந்திரி சி. சி. பிஸ்வாஸ் மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

ஆனால், தேர்தல் கமிஷன்தான் இந்த முடிவை குடியரசுத் தலைவருக்கும் கவர்னருக்கும் தெரிவித்து இது குறித்து முடிவு மேற்கொண்டாக வேண்டும் என்றும் மந்திரி கூறியிருக்கிறார்.

டில்லி சர்க்காரும் மாநில சர்க்கார்களும் சேர்ந்து, நடைமுறை நிதி ஆண்டில், ரூ. 226 26 கோடி வரை மக்களிடமிருந்து கடன் வாங்கியிருப்பதாக மக்கள் சபைக் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கப்பட்டது.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★



★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## அகவிலை ஏற்றத்தின் எதிரொலி?

### கவர்னர், மந்திரிமார் துணைவியர் குமுறல்?

மத்திய பிரதேச கவர்னர் தகவல்

இந்தூர், டிச. 4—

அகவிலை ஏற்றம், தங்கள் வருமானத்தால் சரிக்கட்டப்பட முடியவில்லை என்று கவர்னர்கள், மந்திரிமார்கள் ஆகியோரின் மனைவியர் குமுறுகின்றனராம்.

மத்தியப் பிரதேச மாநில கவர்னர் டாக்டர் பட்டாபி சீதாராமையா இப்படிக் கூறியிருக்கிறாராம்.

#### புதிய வரிவிதிப்பு

புதிய வரிவிதிப்பினால், பணத்தின் வாங்கும் சக்தி குறைந்து வருகிறதாம்!

இதுகாறும் கவர்னர்கள் வருமானத்தில், ரூபாய்க்கு பத்தரை அணா அதிக வரியாகச் செலுத்தி வந்தனர் என்றும், இப்போது 12 அணா செலுத்தவேண்டியுள்ளது என்றும் அவர் அங்கலாய்த்துக் கொண்டாராம்!

இந்தப் புதிய சூழ்நிலையில் எவரும் பணக்காரராயிருக்க விரும்ப மாட்டார்கள் என்றும், அதே நேரத்தில் எவரும் ஏழையாயிருக்கவும் விரும்பவில்லை என்றும் அவர் கூறினாராம்!

## ரஷ்ய சர்க்கஸ் 5 நாளில் ரூ. 65,000 வசூல்

சென்னை, டிச. 7—

சென்னையில் நடந்த ஐந்து நாட்களில் நடைபெற்ற ஆறு காட்சிகளின் மூலம் ரூ 65,000 வசூல் ஆனது என்றும், இது பண்டிதரின் தேசிய நிவாரண நிதியில் சேர்க்கப்பட்டது என்றும், ரஷ்ய சர்க்கஸ் வரவேற்புக் குழுவின் தலைவர் தகவல் தந்திருக்கிறார்.

அடுத்த ஆண்டிற்குள் கேரளத்திலுள்ள பழுப்பு நிலக்கரிப் படிவங்களைப் பற்றிய ஆராய்ச்சி 'சர்வே' முடிவடைந்துவிடுமாம்.

## திரு. மதனகோபால் மறைவு

சென்னை, டிச. 7—

சிறந்த வழக்கறிஞரும் நீதிக் கட்சித் தலைவர்களுள் ஒருவருமான ஆர். மதனகோபால் (நாயுடு) அவர்கள் தமது 72-வது வயதில் இன்று காலை இயற்கை எய்தினார் என்ற சோகச் செய்தி அறிவிக்க வருந்துகிறோம்.

திரு. மதனகோபால் அவர்கள் பிரபலமான வழக்கறிஞர் என்பது மட்டுமின்றி, சட்டக் கல்லூரிப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். இன்று வழக்கறிஞராக இருக்கும் பலர் அவரிடம் பாடம் கற்றவர்களாவர்.

திரு. மதனகோபால் அவர்கள், நகரசபை உறுப்பினராக 5 முறைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு சீரிய பணியாற்றினார் என்பதுடன், வரி விதிப்பு அப்பீல் குழுவின் தலைவராகவுமிருந்து பணியாற்றியிருக்கிறார்.

மேல்சட்டசபை உறுப்பினராக இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டு செவ்விய பணியாற்றினார் என்பதுடன், மந்திரிக்கு 'கவுன்சில்' செயலாளராகவும் பணியாற்றியிருக்கிறார்.

சென்னை பல்கலைக் கழக 'செனட்'டிலும், இந்திய விஞ்ஞானக் கழகத்திலும், எஸ். ஐ. ஏ. ஏ. நிறுவனத்திலும் உறுப்பினராயிருந்து அரும்பணியாற்றியவர்.

ஜஸ்டிஸ் கட்சி தோன்றியநாளிலிருந்து அதன் உறுப்பினராகி, போற்றத் தகுந்த பணியாற்றிவந்தவர்.

1908-ம் ஆண்டிலிருந்து உயர் நீதி மன்றத்திலும் நகர் சிவில் நீதிமன்றத்திலும் பிரபலமான வழக்கறிஞராகப் பணியாற்றி வந்தவர் என்ற முறையில் மதனகோபால் அவர்களின் மறைவு குறித்து, அட்வகேட்-ஜெனரல், திரு. வேங்கடாச்சாரி, பிரதம நீதிபதி, மற்றும் நீதிபதி பி. என். இராமசாமி ஆகியோரிடம் தெரிவித்தார்.

பிரதம நீதிபதி, தன்னுடையவும் இதர நீதிபதிகளுடையவும் ஆழ்ந்த அனுதாபத்தை, மதனகோபால் அவர்களின் குடும்பத்திற்குத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

பிரதம நீதிபதி தனக்கு மதனகோபாலைக் கடந்த 35 ஆண்டுகளாகத் தெரியும் என்றும் அவர் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டிருந்தார் என்பதற்கும் அப்பால் சிறந்த பொதுநலத் தொண்டராகவும் இருந்தார் என்றும் பாராட்டினார்.

மறைந்த மதனகோபால் அவர்களை இழந்து தவிக்கும் அவரது துணைவியாருக்கும், இரு குமாரர்களுக்கும் நாம் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மறைந்த உத்தமருக்கு நமது இறுதி வணக்கங்களைத் தெரிவிக்கிறோம். (ஆ—ர்.)

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 8—12—'56 சனி

# டாக்டர் அம்பேத்கார்

டாக்டர் அம்பேத்கார் மறைவு, தாழ்த்தப்பட்டும் ஒதுக்கப்பட்டும் கிடக்கும் கோடிக் கணக்கான மக்களை மட்டுமே கொடுந் துன்பத்திலாழ்த்தக் கூடிய சோகச் செய்தியாக இருக்கவில்லை. பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக்கும் ஆணவப் போக்கை எதிர்த்து வரும் அனைவருக்கும் நெஞ்சைப் புண்படுத்தும் செய்தியாகும் அவர் மறைவு.

பிறப்பினால் தாழ்ந்தவன் எனக் கூறப்படுவதினால் இழுவேது இன்னல்தான் ஏது என வாதிடும் சாதித் திமிர் கொண்டோர் இன்றும் உளர். அப்பெரும் குணவான்களால், டாக்டர் அம்பேத்கார் அவர்களின் சேவையில் மறைந்து கிடக்கும் உண்மையை உணர்ந்துகொள்வது இயலாததாகும்.

சாதிப் பாகுபாடு உள்ளவரை தீண்டாதார் எனப்படுவோர் பிரச்சினைக்கும் தீர்வு காண முடியாது என்பது மறைந்த அண்ணலாரின் உள்ளக்கிடக்கையாகும். அது மிகைப்படுத்திக் கூறப்படுகிறது எனக்கோபப்பட்டோர் பல்லோர். அக்கருத்தை எதிர்த்துப் போரிட்டவர் பலர். ஆனால், அவருடைய உள்ளக் கிடக்கையின் உண்மை இன்று தீண்டாதார் எனப்படுவோரின் துன்பம் துடைக்க எடுத்துக் கொள்ளப்படும் நடவடிக்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் மெய்ப்பிக்கப்பட்டு வருவதை நாம் அனைவரும் கண்கூடாகக் கண்டு வருகிறோம்.

தம் மாணவப் பருவம் முதற்கொண்டே, தாம் பிறந்த குடியின் தலைமீது தொன்று தொட்டுச் சுமத்தப்பட்டுள்ள நிலையை வேருடன் கல்லியெறிவதில் கருத்துச் செலுத்தலானார். தமது புரட்சிப் பணிக்குத் தம்மக்களைத் திரட்டுவதில் கணிசமாக வெற்றியும் பெற்றார்.

தமது போக்கில் அவர் முழு வெற்றி பெறத் தவறிவிட்டார் எனக் கருதிக்கொண்டிருக்கும் அவர் எதிர்ப்பாளர்கள்கூட, தீண்டாமை குறித்துத் தாங்கள் கொண்டிருந்த கருத்து, அவருடைய தீவிர உழைப்பால் எந்த அளவு மாறிவந்திருக்கிறது என்ற உண்மையை ஒப்ப மறுப்பது இடையாது.

உலக உத்தமர் காந்தியார், தீண்டப்படாதப் பழங்குடி மக்களுக்குத் தரப்பட்டிருந்தத் தனித் தொகுதி முறையை எதிர்த்து உண்ணா நோன்பு மேற்கொண்டார். கூட்டுத் தேர்தல் முறையை ஏற்க முன்வந்ததின் மூலம், உத்தமரின் உயிரை மீட்டுத் தந்த புகழை டாக்டர் பறித்துக்கொண்டு இருக்கிறார்.

துவக்க முதற்கொண்டே காங்கிரஸ் கட்சியுடன், அவர் ஒவ்வொரு துறையிலும் பிணங்கியே வந்திருக்கிறார். அப்படி இருந்தாலும் இந்தியத் துணைக் கண்டம் சுதந்திரம் பெற்ற பிறகு, அரசியல் சட்டத்தை ஆக்குவதில் அவருடைய ஒத்துழைப்பைக் காங்கிரசுத் தலைமை கோரியபொழுது, அவர் தயக்கம் ஏதும் காட்டாது, தமது ஒத்துழைப்பை அளித்தார். அதன் விளைவுதான் இந்திய அரசியல் சட்டம்.

அவர் நேரு பண்டிதரின் முதல் அமைச்சரவையில் சட்ட அமைச்சராக இருந்து உருவாக்கிய இந்து தொகுப்பு மசோதா, காங்கிரஸ் கட்சித் தலைவர்களுக்குள்ளாகவே பெரும் எதிர்ப்பைக் கிளப்புவதற்குக் காரணமாக அமைந்தது. இருந்தாலும், அம்மசோதா சிற்சில உருமாற்றங்களுடன், பல துண்டுகளாக்கப்பட்டு இன்று சட்டமாக்கப்பட்டு வருகிறது.

அரசியல் சட்டத்தை உருவாக்கிய முழுப் புகழுக்கும் உரியவர் அவர்தான். என்றாலும், 'அதைத் தீயிட்டுக் கொளுத்துவேன்' என்று முதல் முதலாகக் கூறியவரும் அவர்தான் என்பதை மறப்பதற்கில்லை.

அவர் பொருள் நூல், சட்டம், சமூக இயல் ஆகிய அருங்கலைகளைக் கற்றுத் தெளிந்தவர். விவாதத் திறமை மிக்கு உடையவர்.

சிறந்த நூலாசிரியர். அவர் எழுதிய நூல்களில் 'பாகிஸ்தான் சிந்தனைகள்' என்ற நூலும், 'காந்தியாரும் காங்கிரசும் தீண்டப்படாத மக்களுக்குச் சாதித்துள்ளது என்ன?' என்ற நூலும், 'ஆந்திரர்கள் யார்?' என்ற நூலும் என்றென்றும், டாக்டரின் பெரும் புலமையையும் எழுத்துத் திறமையையும் எடுத்துக் காட்டிக் கொண்டிருப்பவைகளாகும்.

அவர் மிகுதியும் சிறந்த நூற்களைப் படிப்பதில் விருப்பமுடையவர். அதன் பலனாக, சொந்தத்தில் ஒரு நூல் நிலையத்தையே ஏற்படுத்திக் கொண்டார்.

இரண்டு திங்களுக்கு முன், இரண்டு இலட்சம பழங்குடி மக்களுடன் நாகபுரியில் புத்த நெறி தழுவியதை, இதற்குள் எவரும் மறந்திருக்க முடியாது; அதே நேரத்தில் அனைத்திந்திய ரீதியில் ஒரு அரசியல் கட்சி பற்றி அறிவித்திருந்ததும் மறக்கத்தக்கதன்று.

தாம் அறிவித்திருந்த கட்சிக்கு, 'உரிமை—சமத்துவம்—சகோதரத்துவம்' என்ற மூன்று இலட்சியங்களை அடிப்படைகளாகக் குறிப்பிட்டிருந்தார். அம்மூன்று இலட்சியங்களையும் தமது கட்சியின் குறிக்கோள்களாகக் கொண்டது சிந்திக்கத்தக்கதாகும்.

டாக்டர் அம்பேத்காரின் மறைவு குறிப்பிட்ட ஒரு சாரருக்கு நஷ்டத்தைத் தந்திருக்கிறது எனக் கூறுவதைவிட, மனித அறநெறிக்கே ஈடுசெய்ய முடியாத நஷ்டத்தைக் கொடுத்திருக்கிறது எனக் கூறுவதே பொருந்தக்கூடியதாகும். அவர் பிரிவால் வருந்திக்கிடக்கும் அனைவருடனும் நாமும் பங்கு கொள்ளுகிறோம்.

இந்திய அரசியல் சட்டத்தில் கண்டுள்ள 14 மொழிகளுக்கும் கல்வி இலாகாக்கள் நிறுவ காசி பல்கலைக் கழகம் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

## பால் உற்பத்தித் திட்டங்கள்

### ரூ. 17½ கோடி ஒதுக்கியுள்ளதாக அமைச்சர் தகவல்

புதுடில்லி, டிச. 6—

பால் உற்பத்திக்கான திட்டங்களுக்காக இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 17½ கோடி ஒதுக்கப்பட்டிருப்பதாக உதவி உணவு மந்திரி கிருஷ்ணப்பா மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

## 'கற்ற கல்விக்கு ஏற்ப வேலை தரப்படுகிறது'

### சீன மாணவர்கள் நிலைபற்றி சௌ-என்-லாய்

சென்னை, டிச. 7—

"சீன மாணவர்கள் பட்டம் பெற்றதும், அவர்கள் கற்ற கல்விக்கு ஏற்றவாறும் விருப்பத்திற்கு ஏற்றவாறும் வேலை தரப்படுகிறது"

என்று, சீனப் பிரதமர் சென்னை மாணவர் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் அவர் பேசுகையில், கடந்த ஏழு ஆண்டுகளில் 30,000-க்கு மேற்பட்ட பட்டதாரிகள் சீனாவில் ஏற்பட்டுள்ளதாகவும், இது கடந்த 50 ஆண்டுகளில் பட்டம் பெற்றவர்களின் எண்ணிக்கையைவிட அதிகம் என்றும் கூறியுள்ளார்.

## குடியாத்தத்தில் தொழில் நுட்பக் கழகம்

வேலூர், டிச. 6—

வேலூர் அருகேயுள்ள குடியாத்தம் என்ற இடத்தில் தொழில் நுட்பக் கழகம் (பாலிடெக்னிக்) ஒன்று நிறுவப்படுமாம்

வேலூரில் மண் பாண்டத் தொழில் பயிற்சி நிலையம் ஒன்றை அமைத்து, அதில் 20 பேர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுமாம்.

## நற்பணிக்கு நன்கொடை!

வேலூர், டிச 6—

குடியாத்தத்தில் அமைக்கப்படும் தொழில் நுட்பக் கழகத்திற்கு (பாலிடெக்னிக்) குடியாத்தம் கல்வி டிரஸ்டைச் சேர்ந்த இராசகோபால் ரூ. 2½ இலட்சம் நன்கொடையாக அளிக்க உறுதி தந்துள்ளார் எனத் தெரியவருகிறது.

## சென்னைக்கு ரூ. 27 லட்சம் டில்லியின் கடன் உதவி

புதுடில்லி, டிச. 6—

அம்மோனியம் சல்பேட் வாங்குவதற்கென சென்னை அரசாங்கத்திற்கு இந்தியப் பேரரசு ரூ. 27 20,000 குறுகிய காலக் கடன் தந்துள்ளது. இந்தத் தொகைக்கு 3 1/8 சதவிகிதம் வட்டி கொடுக்க வேண்டுமாம்; 18 திங்களில் கடனைத் திருப்பித் தர வேண்டுமாம்.

## ஜின்னா மாளிகை பற்றி பண்டிதர் அறிவிப்பு

புதுடில்லி, டிச 6—

பம்பாயிலுள்ள ஜின்னா மாளிகை தற்போது அகதிகளின் சொத்துக்களில் சேர்க்கப்பட்டுள்ளதென்றும் அம்மாளிகையின் விலை மதிப்பு இன்னும் கணக்கிடப்படவில்லையென்றும், விரைவில் அது இந்திய அரசாங்கத்தின் பொறுப்பில் கொண்டுவரப்படும் என்றும், அம்மாளிகையை வாங்குவதற்கு விரும்பிய பாகிஸ்தானுக்கு இந்தத் தகவலை அனுப்பியுள்ளதாகவும் பண்டித நேரு மாநிலங்கள் சபையில் அறிவித்துள்ளார்.

## 5 இலட்சம் ஏக்கர் நிலம்

மணிலா, டிச. 6—

இராணுவத் தளமாக உபயோகிக்கப்படவந்துள்ள 5 இலட்சம் ஏக்கர் நிலத்தை அமெரிக்க அரசாங்கம் பிலிப்பைனுக்கு விட்டுக் கொடுத்துள்ளது: இந்த நிலங்களின் மதிப்பு 8 கோடி 30 இலட்சம் டாலர்களாம்.

## 1936-ம் ஆண்டுக்குப் பிந்திய 'இனும்'கள்

### ஆந்திரப் பிரதேச சர்க்கார் ஒழிக்கும்

1936-ம் ஆண்டுக்குப் பிந்திய இனும் எஸ்டேட்களை எல்லாம் ஒழித்துவிட ஆந்திரப் பிரதேச சர்க்கார் முடிவு செய்திருக்கிறார்கள் என்று தெரியவருகிறது.

இவை 1948-ம் ஆண்டு இனும் ஒழிப்புச் சட்டத்தில், விதிவிலக்கு அளிக்கப்பட்டிருந்தவையாகும். இப்போது இவையும் அந்தச் சட்டத்திற்கு உட்படுத்தப்படும் என்று சர்க்கார் கூறியிருக்கிறது.

இந்த எஸ்டேட்டுகளின் இனும்தார்கள் மேல்வாரம், குடிவாரம் உரிமைகளை அனுபவித்துவருகின்றனர்.

## கூழுக்கும் ஆசை-மீசைக்கும் ஆசை!

பாரிஸ், டிச. 5—

அல்ஜீரியாவில் நிகழ்ந்துகொண்டிருக்கும் இரத்தக் களறியை நிறுத்துமாறு பிரெஞ்சு மேல் (சட்ட)சபையில் தீர்மானம் ஒன்று நிறைவேறியிருக்கிறது. ஆனால் அதே போது, அல்ஜீரியாவில் பிரான்சிற்கு உள்ள ஆதிபத்திய உரிமைக்கும் குந்தகம் ஏற்படக் கூடாது என்று தீர்மானம் கூறுகிறது.

## நாகி பற்றி ரஷ்யாவுக்கு ஏதும் தெரியாதாம்!

பெல்கிரேட், டிச. 5—

ஹங்கேரியின் முன்னாள் பிரதமர் கைது செய்யப்பட்டது குறித்து தங்களுக்கு ஒன்றும் பொறுப்பில்லை என்றும், தங்களுக்கு அதுபற்றி எதுவும் தெரியாது என்றும் யூகோ தூதுவராலயத்திலிருந்து கிளம்பிய நாகியும் நாற்பது பேர்களும் என்ன ஆனார்கள் என்ற விவகாரம் முழுக்க முழுக்க ஹங்கேரி சர்க்காரைப் பொறுத்த விஷயம் என்றும் ரஷ்ய சர்க்கார் யூகோ சர்க்காருக்குத் தெரிவித்திருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது.

## ரஷ்ய இராணுவத்தின் முயற்சி தோல்வி!

புடாபெஸ்ட், டிச. 6—

புடாபெஸ்ட் நகரத்தில் கிழக்குப் பகுதியிலுள்ள ஒரு தொழிற்சாலையைச் சேர்ந்த மூன்று தொழிலாளர்களை சோவியத் இராணுவப் படையினர் கைது செய்ய முற்பட்டனரென்றும், ஆனால் அவர்கள் முயற்சி படுதோல்வி அடைந்துவிட்டரென்றும் கூறப்பட்டுள்ளது

700 புடாபெஸ்ட் தொழிலாளர்கள் சோவியத் இராணுவத்தினர் அவ்வாறு கைது செய்ய முடியாதபடி எதிர்த்தனராம்.

## பர்மாவிலிருந்துஇறக்குமதி செய்யப்பட்ட அரிசி

### விநியோகிக்கப்பட்ட விவரம்

20-11-56 வரையுள்ள காலத்தில் பர்மாவிலிருந்து 2,13 000 டன் அரிசி சர்க்கார் கணக்கில் வந்ததாகவும், இதில் மேற்கு வங்கத்திற்கு 67 000 டன்; காஷ்மீரத்திற்கு 14,400 டன்; இதர மாநிலங்களுக்கு 35,000 டன் என்ற அளவில் விநியோகம் செய்யப்பட்டதாம்; மிச்சத்தில் சிறிது பாகம் மத்திய 'டிப்போ'க்களின் மூலம் மக்களுக்கு நேரடியாக வழங்கப்பட்டதாம்.

## 27,000 வெளிநாட்டுப் பிரயாணிகள் வந்தனர்!

1956 ஜனவரியிலிருந்து ஜூலை வரையில் மொத்தம் சுமார் 27,000 வெளிநாட்டு உல்லாசப் பிரயாணிகள் இந்தியாவுக்கு வருகை தந்தனர் என்றும், இதில் 6,000 பேருக்குமேல் அமெரிக்கர் என்றும் மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## மைசூர் இரும்பு உருக்கு தொழிற்சாலை

### ரூ. 6 கோடி செலவில் விரிவுபடுத்தப்படுமாம்

ஷிமோகா, டிச 4—

மைசூர் இரும்பு — உருக்குத் தொழிற்சாலையை விரிவுபடுத்துவதற்கான திட்டங்களை டில்லி சர்க்கார் அங்கீகரித்து விட்டார்களாம்.

இவை இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நிறைவேறுமாம்.

விரிவுபடுத்துவதற்கு ரூ. 6-கோடி செலவாகுமாம்.

இரண்டாம் திட்ட கால இறுதியில், தொழிற்சாலையின் உற்பத்தி ஆண்டுதோறும் ஒரு இலட்சம் டன்னாக இருக்குமாம்.

## பர்மா அயல் நாட்டினர் பதிவுச் சட்டம்

### 'இந்தியர்' கோரிக்கை பற்றி டில்லி செய்தது என்ன?

புதுடில்லி, டிச 6—

'பர்மா அயல் நாட்டினர் பதிவுச் சட்டத்தின்கீழ் பதிவு செய்து கொள்வதற்குக் கட்டணம் செலுத்த வேண்டுமென்று விதிக்கும் புதிய விதிபற்றி பர்மாவிலுள்ள இந்தியர்களிடமிருந்து முறையீடு ஏதும் வந்திருக்கிறதா?' என்று மக்கள் சபையில் எழுந்த கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில், அமைச்சர் கே. சந்தா கூறியதாவது :—

"பர்மாவில் வாழும் இந்தியர்கள் முறையீட்டின்மீது அங்குள்ள இந்தியத் தூதுவர், பதிவுக் கட்டணம் பற்றிய புதிய விதிகளை மாற்றுமாறு பர்மிய சர்க்காரைக் கோரியுள்ளார்; மேற்கொண்டு நடவடிக்கைகள் எதிர்பார்க்கப்படுகின்றன இந்தப் புதிய விதிகளின்படி அந்நியர்களெல்லோரும் ஆண்டுதோறும் 25 கயாத் (பர்மா நாணயம்) கட்டணம் செலுத்தி, தங்களுடைய அத்தாட்சிப் பத்திரங்களைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டும்."

## கதவடைப்பை நீக்க கம்யூனிஸ்டுகள் தடை?

### 10,000 தொழிலாளர் நிலையென்ன?

பர்கானா மாவட்டத்திலுள்ள 24-சணல் ஆலைகளில், பல இலாகாத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ததால் கதவடைப்பு ஏற்பட்டதென்றும், இதனால் 10 000 தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் மக்கள் சபையில் தொழிலாளர் துணை அமைச்சர் குறிப்பிட்டுவிட்டு மேலும் சொன்னார்:—

'வங்க சர்க்காரின் சமரச நிறுவனத்தின் முயற்சியில் ஆலைகளைத் திறக்கவும் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பவுமான நிலை ஏற்பட்டுள்ளது; ஆனால் கம்யூனிஸ்டுக் கட்சி குறுக்கிட்டு, தொழிலாளர்களைத் தடுக்கிறது."

## சமஸ்தானாதிபதிகளுக்குத் தரப்படும் மானியம்

### குறைத்துக்கொள்ளச் செய்ய இந்திய சர்க்கார் முயற்சி

புதுடில்லி, டிச. 6—

'சமஸ்தானாதிபதிகளின் சொந்தச் செலவுகளுக்காகத் தரப்பட்டு வரும் மானியத்தை அவர்களாகவே குறைத்துக் கொள்ளுமாறு செய்வதற்காக அவர்களுடன் சர்க்கார் கடிதப்போக்குவரத்து நடத்தி வருகிறது' என்றும் மக்கள் சபையில் உள்நாட்டு அமைச்சர் தெரிவித்துள்ளார்.

நிலமில்லாத தொழிலாளர்களைக் குடியமர்த்துவதற்காக, இரண்டாவது திட்ட காலத்துக்கு மொத்தம் ரூ 5,54,00,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது; இதில் ரூ. 5,05,00,000 மாநில சர்க்கார்களும் ரூ. 49 இலட்சம் மத்திய சர்க்காரும் செலவிடுவார்கள்.



# 'இழந்த உரிமையைப் பெறவே போராடுகிறோம்'

## திராவிடம் பிரிந்தால் வாழுமா என்போருக்கு ஜின்னாவின் பதிலை சுட்டிக்காட்டுகிறார் மனோகரன்

### இலங்கை வரவேற்பில் சொற்பொழிவு

"உரிமை மறுக்கப்பட்டு ஒடுக்கப்பட்ட இனம் வீறுகொண்டு எழுவது இயற்கை; வரலாற்றைப் புரட்டிப் பாருங்கள்—உரிமைக் குரலை ஒடுக்க முடிந்ததா? எந்த இனம் தன் விடுதலைக்காகப் போர்க் கொடி ஏந்தி வீழ்ந்தது? உரிமைக் குரலை அடக்கி ஒடுக்க நினைத்த ஆணவக்காரர்கள் எல்லாம் அழிந்தொழிந்தார்கள்; தன் இனத்தின் உரிமைக்காகச் சுதந்திர சன்னிதானத்தில் ஒதுங்கியவர்கள் வெற்றிதான் பெற்றிருக்கிறார்கள்.

"திராவிட முன்னேற்றக் கழகம் ஓர் விடுதலைப் பேரியக்கம். சமுதாய, அரசியல், பொருளாதாரத் துறைகளிலே உயர்ந்த இலட்சியத்தை அடிப்படையாகக்கொண்டு ஒப்பில்லாத ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க வேண்டுமென்பதற்காகவே அது பாடுபட்டு வருகிறது; வடநாட்டு ஆதிபத்தியத்தை ஒழித்து, திராவிட சமதர்மக் குடியரசை நிறுவுவதே அதன் நோக்கம்."

இவ்வாறு, தோழர் இ. மனோகரன் அவர்கள், 15—11—56-ல், கொழும்பு லேயாட்ஸ் பிராட்வேயிலுள்ள நாராயண குரு மண்டபத்தில், இலங்கை தி. மு. கழகம் தனக்கு அளித்த வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அவர் பேசுகையில் மேலும் குறிப்பிட்டதாவது:—

"தி மு. கழகத்தின் இக்கத் திட்டத்திற்கு ஆதரவுண்டா?—என்று கேட்பவர்கள் உண்டு; ஆந்திரம் ஆதரிக்கிறதா? கன்னடம் கை கொடுக்கிறதா? என்பன போன்ற கேள்விகளைக் கேட்கிறார்கள்.

"நாம் இனத்தால் ஒன்றுபட்டவர்கள்; ஏதோ சூழ்நிலையில் நாம் பிரிந்துவிட்டோம்; என்றாலும், மொழிவழி பிரிந்து, இனவழி கூடி திராவிடக் குடியரசை அமைக்க விரும்புகிறோம.

"திராவிடம் பிரிந்தால் வாழுமா?—என்கிறார்கள்; 'நிச்சயமாக வாழ முடியும்' என்று புள்ளி விவரங்களைக் காட்டிய போது, வேறு சிலர், 'திராவிடம் பிரிந்தால் கப்பல் படை வேண்டுமே' என்று கூறுகிறார்கள்; நாட்டிலே இப்படிப்பட்ட அப்பாவி மேதைகளும் உண்டு!

"பொருளாதாரத் துறையில் திராவிடத்தைப் பற்றிப் பொருளாதார நிபுணர்கள் கூறிய திட்டத்தைக் காட்டினோம்.

"பாகிஸ்தான் பிரிவினையின் போது ஜின்னாவிடம் பீவர்லின் நிக்லேஸ் கேட்டார் — 'பாகிஸ்தான் பிரிந்தால் வாழுமா?'—என்று! ஜின்னா அவர்கள் திருப்பிக் கேட்டார்கள் — 'இங்கிலாந்து அடிமையின்றி உரிமையற்றிருப்பதை விரும்புகிறீர்களா? அல்லது வறுமையுடனாவது உரிமையோடு இருப்பதை விரும்புகிறீர்களா?'—என்று! அப்போது பீவர்லின் நிக்லேஸ் குறிப்பிட்டார்—'வறுமையிலும் உரிமையோடிருப்பதை நாங்கள் விரும்புகிறோம்' என்று!

"பாகிஸ்தான் என்பதற்கு என்ன பொருள்—என்று ஜின்னாவிடம் கேட்டபோது, ஐந்தே வார்த்தையில் பதில் சொன்னார்—'The Muslim are a Nation'—என்று! இதைத்தான் நாம் திருப்பிக் கூற விரும்புகிறோம்—'The Dravidan are a Nation' என்று!

## 'தமிழகம்'—வார ஏடு

30—11—56 அன்று பம்பாய் உயர் நீதிபதி முன்னிலையில் தோழர் பி. எஸ். கோவிந்தசாமி அவர்கள் 'தமிழகம்' என்ற திங்கள் இருமுறை வெளியீட்டிற்குத் தம்மை ஆசிரியராகவும், வெளியிடுபவராகவும் பதிவு செய்துகொண்டார்.

## சென்னை மாணவர் மன்றப் பேச்சுப் போட்டிகள் ஒத்திவைப்பு

15, 16—12—56 ஆகிய நாட்களில், சென்னை மாணவர் மன்றச் சார்பில் நடைபெற இருந்த முதல் 5 வகுப்புவரை படிக்கும் மாணவர் கட்குரிய பாட்டு, கதை, பேச்சுப் போட்டிகள் 22, 23—12—56 நாட்களில் நடைபெறும்.

## நன்றியறிவிப்பு

29—11—56ல் எதிர்பாராதவிதமாக என் துணைவியார் விசாலாட்சி இயற்கை எய்தியமை குறித்து நேரிலும் தபால், தந்தி மூலமும் அனுதாபம் தெரிவித்துக்கொண்ட நண்பர்கள் அனைவருக்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இரே. இளம்வழுதி, கடலூர்.

## தலைச்சேரி — மைசூர் இரயில் பாதை

மைசூர் — தலைச்சேரிக்கு இடையே இரயில் பாதை அமைக்கமின் பொறியாளர் தப்புரவு நடத்த அனுமதியளிக்கப்பட்டுள்ளதாம். இந்தப் பாதையின் நீளம் 180 மைல் எனக் கூறப்படுகிறது

## ஊதிய உயர்வுக் கோரிக்கையை சர்க்கார் மறுத்தால்...!

### 'ஜனவரியில் அடையாள வேலை நிறுத்தம் செய்வோம்'

### மாநில என்- ஜி. ஓ. சங்கத் தீர்மானம்

திருச்சி, டிச. 7—

சென்னை சர்க்காரில் பணியாற்றும் பதிவு பெறாத ஊழியருக்கு அண்மையில் பஞ்சப்படியில் ரூ 5 மட்டும் அதிகமாகக் கொடுக்க முடிவு செய்ததைக் கண்டித்து, அத்தொகை மிகக் குறைவான ஒரு தொகை என்றும், அடுத்த ஆண்டு ஜனவரி திங்கள் 5-க் தேதிகுள் மத்திய சர்க்கார் ஊழியர்களுக்குத் தரப்படுவதுபோன்ற சமமான ஊதியம், பஞ்சப்படி மாநில சர்க்கார் ஊழியர்களுக்கும் தரப்பட வேண்டுமென்றும் கோரியும், அவ்வாறு செய்ய சர்க்கார் தவறுமானால் 9—1—57 காலை 1 மணி நேரம் அடையாள வேலை நிறுத்தம் செய்வது என்றும், இங்கு நடைபெற்ற என். ஜி ஓ. சங்கக் கூட்டம் ஒன்றில் தீர்மானமாக நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

கடந்த மாதம் 18-ந் தேதியன்று மாயூரத்தில் கூடிய என். ஜி. ஓ. சங்கத்தின் மத்தியக் குழுக் கூட்டத்தில், என். ஜி. ஓ-க்களுக்கு கிராக்கிப்படியாக ரூ. 5 மட்டுமே உயர்த்தியுள்ள சர்க்கார் போக்கினைக் கண்டிக்கும் வகையில் நவம்பர் 30-ந் தேதியன்று கண்டன நாளாகக் கொண்டாடுமாறு கேட்டுக்கொண்டதற்கிணங்க, திருச்சி என். ஜி. ஓ-க்கள் அனைவரும் அன்று, சிவப்பு நிறப் 'பாட்ஜு'கள் அணிந்துகொண்டு அலுவலகம் சென்றனர்.

அன்று மாலை, திருச்சி கண்டோன்மெண்ட் என். ஜி. ஜி. ஓ. இல்லத்தில் ஆயிரத்திற்கு மேற்பட்ட என். ஜி. ஓ-க்கள்கூடி, திரு அருணாசலம் தலைமையில் மௌன ஊர்வலமாக வந்து டாக்டர் மதுரம் மண்டபத்தை அடைந்தனர்.

அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்த திரு. டி. அருணாசலம் அவர்கள், என். ஜி ஓ-க்களுக்கு மத்திய சர்க்கார் ஊழியருக்குக் கிடைக்கும் சம்பளம், பஞ்சப்படி கிடைக்கும்வரை போராட்டம் ஓயாது என்று குறிப்பிட்டார்

## கேரளத்தில் டில்லிக்காக ரூ. 1 கோடி செலவில் அச்சகம்

### ஆயிரம் பேர் வேலை செய்யக்கூடுமாம்

திருவனந்தபுரம், டிச. 5—

ரூ. 1·6 கோடி செலவில் சுமார் ஆயிரம் பேருக்கு வேலை தரக்கூடிய பெரிய அச்சகம் ஒன்றை டில்லி சர்க்கார் கேரளத்தில் கொரட்டி எனும் இடத்தில் நிறுவுவர் என்று தெரியவருகிறது.

தென்னாட்டில், டில்லி சர்க்காருக்காக அமையும் அச்சகமாகும் இது என்றும், இந்த இடத்தைத் தேர்ந்தெடுப்பதற்குமுன், மத்திய சர்க்கார் அதிகாரி ஒருவர், கோவை அருகே ஒரு இடத்தையும் கேரளத்தில் வேறு இரு இடங்களையும் பார்வையிட்டார் என்றும் கூறப்படுகிறது.

## நல்லெண்ணம் வளரப் பாடுபடுவாராம்!

கொல்லம், டிச. 5—

சென்னைக்கும் கேரளத்திற்குமிடையே நல்லெண்ணம் வளரத் தம் சக்திக்கு இயன்றதையெல்லாம் செய்யப்போவதாக சென்னை கவர்னராக நியமனம் பெற்றிருக்கும் ஏ. ஜே. ஜான் கூறியுள்ளார்.

தோழர்கள் எம். எஸ். இராமசாமி, என். பி. வெங்கடராமன், பி. வேலாயுதம் ஆகியோரும் பேசினர்.

கூட்டத்தில், அரியலூர் இரயில் விபத்தில் உயிரிழந்தோர் குடும்பத்தவருக்கு அனுதாபம் தெரிவித்து இரண்டு நிமிட நேரம் மௌனம் மேற்கொள்ளப்பட்டது. (க. தி.)

## சிதம்பரம் மணிமேகலை நாடக மன்றத் துவக்கம்

28—11—56-ல், சிதம்பரத்தில், தோழர் க. இளவழகன் தலைமையில் நடைபெற்றப் பல்கலைக் கழக மாணவர்கள் கூட்டத்தில் 'மணிமேகலை நாடக மன்றம்' துவக்கப்பட்டு நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயலாளர்: க. இளவழகன்; பொருளாளர்: சௌந்தரராசன்; செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மன்ற வளர்ச்சிக்காக நாடகம் ஒன்று நடத்துவதெனவும், தி. மு. கழகத் தேர்தல் நிதி அளிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டது இம்மன்றத்தினரால 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது—வரப்பெற்றோம்—நன்றி.—பொறுப்பாளர்.

## மத்தியக் கிழக்கில் அமெரிக்கா கண்ணோட்டம்?

மகாபலிபுரம், டிச. 6—

மத்தியக் கிழக்கில், பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய வல்லரசுகளின் இடத்தைப் பிடித்துக்கொள்ள அமெரிக்கா விரும்புகிறதா என்று தனக்குச் சந்தேகமிருப்பதாக சீனப் பிரதமர் சௌ-என்-லாய் கூறியிருக்கிறார்.

சூயஸ் கால்வாய் தங்கள் ஆதிக்கத்தின்கீழ் வரவேண்டும் என்ற எகிப்தின் ஆதிபத்திய உரிமையில் குறுக்கிடும் திட்டத்திற்குத் தொடர்ந்து அமெரிக்கா ஆதரவு தரப்போகிறதோ என்றும் சௌ-என்-லாய் கவலை தெரிவித்திருக்கிறார் பத்திரிகையாளரிடம்.

"சூயஸ் கால்வாய் பகுதியிலிருந்து பிரிட்டிஷ்—பிரெஞ்சுப் படைகள் காலதாமதமின்றி, உடனடியாக நிபந்தனை ஏதுமின்றி வெளியேறியாகவேண்டும்; ஐ. நா. படை, அந்த வெளியேற்றத்தைக் கண்காணிப்பதோடு, சூயஸ் கால்வாயை எகிப்திய சர்க்காரின் துணையுடன் தத்தம் செய்யவேண்டும்" என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## சியாங் பற்றி!

சியாங்-கே-ஷேக்கிற்கு செஞ்சீனாவில் உயர்பதவி காத்திருப்பதாக சௌ-என்-லாய் சமீபத்தில் அறிவித்ததுபற்றி அவரிடம் கேட்டபோது, 'சியாங்கும் அவரது சகாக்களும் சீனர்கள்; எனவே அவர்கள் தங்கள் தாயகத்திற்குத் திரும்புவார்கள்—திரும்பத்தான் வேண்டும் என்று நாங்கள் கருதுகிறோம்,' என்று அவர் கூறியிருக்கிறார்.

## தேர்தல் நிதி சேர்க்கும் வாரம்

மகளிர் மன்ற உறுப்பினர்கட்கு வேண்டுகோள்

10-12-56 முதல் 16-12-56 வரையுள்ள காலத்தைத் தேர்தல் நிதி வாரமாகக் கொண்டு நிதி திரட்டுமாறு தி. மு. கழகப் பொதுச்செயலாளர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, ஆங்காங்குள்ள மகளிர் மன்ற உறுப்பினர்கள், தத்தம் வட்ட தி. மு. கழகக் கிளைகளுடன் சேர்ந்தோ, மற்றத் தாய்மார்களுடன் கலந்தோ தேர்தல் நிதிக்கெனப் பொருளாகவோ பணமாகவோ வசூலித்து, மகளிர் மன்றத்தின் சீரிய முயற்சியினை நிறைவேற்றித் தருமாறு வேண்டுகிறேன்,”

என்று, சென்னை மகளிர் மன்றத் தலைவர் தோழியர் சத்தியவாணி முத்து அறிவிக்கிறார்.

## சென்னை 8-வது வட்ட

தோழர்களுக்கு வேண்டுகோள்

10—12—56 முதல் 16–12–56 வரை, சென்னை 8-வது வட்ட தி. மு. கழகக் கிளையிலிருந்து தினமும் மாலை 6 மணிக்கு, கிளைக் கழகத் தோழர்கள் தி. மு. க. தேர்தல் நிதி வசூலிக்க வருவார்கள். கழகத்தைச் சேர்ந்த ஏனைய தோழர்களும் ஒத்துழைப்புத் தருமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

## சென்னை பி.&சி. ஆலை

தி. மு. க. தொழிலாளருக்கு வேண்டுகோள்

“25—12—56 அன்று நடைபெற இருக்கும் தி. மு. கழகத் தேர்தல் நிதி அளிப்புக் கூட்டத்தில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் கலந்து கொள்ள இசைவு தந்துள்ளார். இதுவரை தேர்தல் நிதி தராத ஆலைத் தொழிலாளர்கள் அனைவரும் 15—12—56-ந் தேதிக்குள் தங்கள் பங்கினைச் செலுத்துமாறு கேட்டுக்கொள்கிறேன். 10—12—56 முதல் 15-12-56 வரையில், திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றப் பணிமனையில் தினமும் மாலை 6 மணி முதல் 8 மணிவரை ஆலைத் தோழர்கள் தங்கள் தேர்தல் நிதியைச் செலுத்தி இரசீது பெற்றுக்கொள்ளலாம் என்றும் தெரிவித்துக்கொள்கிறேன்,”

என்று, சென்னை பி. அண்டு சி. ஆலை தி மு கழகத் தேர்தல் நிதிக் குழுச்செயலாளர் கே சுப்பிரமணி அறிவிக்கிறார்.

## மதுரை நகர தி. மு. க. செயற்குழுக் கூட்டம்

★

9—12—56 காலை 10 மணிக்கு மதுரை மேலக்கோபுரத் தெரு, எண் 66 கழக இல்லத்தில் நகர தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். தி. மு. கழகத் தேர்தல் நிதி திரட்டுவது குறித்து ஆராயப்படும்.

* * *

மதுரை நகர் தி. மு. கழகக் கிளைகளுக்கு வேண்டுகோள்

“மதுரை நகரில் தி மு கழகக் கிளைத் தோழர்கள், பொதுச் செயலாளர் அறிக்கைக்கேற்ப 10—12—56 முதல் தேர்தல் நிதி திரட்டும் வேலையில் ஈடுபட்டுப் பெருந்தொகை திரட்டி, அதனை 15—12—56 அன்று மதுரை, தமுக்கம் மைதானத்தில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களிடம் அளிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.”

என்று மதுரை நகர தி மு கழகச் செயலாளர் தோழர் பி. கே. சேதுராமன் அறிவிக்கிறார்.

**-***************-**

## கலைவிருந்து டிக்கெட்டுகள்

★

9—12—56 ஞாயிறு காலை 9-மணி முதல் S. I. A. A. திடலில், தி. மு. க. தேர்தல் நிதி கலைவிருந்து டிக்கெட்டுகள் கிடைக்கும்.

**-*-*****************

## தசாம்ச முறை நாணயங்கள்

கனவேகத்தில் தயாராகின்றனவாம்

புதுடில்லி, டிச. 8—

வரும் 1957-ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல், தசாம்ச நாணய முறையை அமுல் செய்யவிருப்பதை ஒட்டி, இப்போதே டில்லி சர்க்காரின் மூன்று நாணயச் சாலைகளும் கனவேகத்தில் நாணயங்களை உற்பத்தி செய்து வருகின்றனவாம்.

மூன்று தொழிற்சாலைகளும் சேர்ந்து மாதத்திற்கு 8 கோடி நாணயங்களை உற்பத்திசெய்து வருகின்றனவாம்.

இந்தத் தகவலை நிதி மந்திரி டி. டி. கே. மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

## சென்னை 11-வது வட்ட

தி. மு. கழகச் செயற்குழு உறுப்பினர்கட்கு :

9-12-56 காலை 10 மணிக்கு, சென்னை 11-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில் கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். தி.மு.கழகத் தேர்தல் நிதி திரட்டுவது குறித்து ஆராயப்படும்.

சொற்பயிற்சிக் கூட்டங்கள்

8—12—56 மாலை 6½ மணிக்கு சென்னை இராயபுரம் கே. வி. கே. சாமி நினைவு மன்றத்தில் தோழர் மு. தமிழ்ச் செல்வன் தலைமையில் ‘சங்க காலப் பெண்டிர்’ எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்.

9—12—56 காலை 10 மணிக்கு, சென்னை 27-வது வட்டம் அறிவியக்க மன்றப் பணிமனையில் தோழர் ந. தட்சிணாமூர்த்தி தலைமையில், ‘மன்றமும் கடமையும்’ எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்.

9—12—56 காலை 8 மணிக்கு சென்னை 8-வது வட்டம், ஜிண்டா சாயபு தெரு, எண் 23 இல்லத்தில் தோழர் பன்னீர்செல்வன் தலைமையில் ‘நாடும் நடப்பும்’ என்பது பற்றித் தோழர்கள் பலர் பேசுவர்.

9—12—56 காலை 9 மணிக்கு சென்னை 42-வது வட்ட தி மு. கழகப் பணிமனையில் ‘அண்ணா பாதையில் நாம்’ எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்

## சேலம்நகர தி.மு.கழகத்

தோழர்கட்கு வேண்டுகோள் :

“பொதுச்செயலாளர் அவர்கள் அறிக்கைப்படி, தி. மு. கழகத் தேர்தல் நிதி திரட்டுவதற்கென நகரக் கழகச் சார்பில் நிறுவப்பட்டுள்ள நிதிக் குழுவினர், 9–12–56 முதல் 16–12–56 வரை நகரின் எல்லா வட்டங்களுக்கும் உண்டியலெடுத்து வருவர். அந்தந்த வட்டக் கிளைக் கழகத் தோழர்களும் செயலாளர்களும் அக்குழுவினருடன் ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்,”

என்று, சேலம் நகர தி. மு. கழகச் செயலாளர் தோழர் இ. ஆர். கிருஷ்ணன் அறிவிக்கிறார்.

* * *

15-வது வட்ட தி. மு. கழகத் தோழர்கள் முயற்சி!

11—12—56 அன்று தோழர்கள் சிற்றுளி-சுப்பிரமணியம், வி. சிவப்பிரகாசம், ஏ. கருப்பண்ணன் ஆகியோர் வேடங்கள் அணிந்து நகரின் எல்லா இடங்களுக்கும் வந்து நிதி திரட்டுவார்கள்.

சொற்பயிற்சிக் கூட்டம்

9—12—56 காலை 10 மணிக்கு, சென்னை — பெத்துநாய்க்கன் பேட்டை மக்கள் மன்றத்தில் தோழர் சி. எஸ். கணேசன் தலைமையில் ‘நாடும் நாடகமும்’ எனும் பொருள் பற்றித் தோழர்கள் பலர் பேசுவர்.

## கழகக் கூட்டங்கள்

★

கீழத்திருப்பூந்துருத்தி :
வடக்குத் தெரு (கழகக் கட்டிடத்திற்கு அருகில்)
10—12—56 மாலை 6 மணிக்கு
தலைவர் : என். இளமறையன்
பேசுவோர்:
என். எஸ். இளங்கோ
அ. பார்த்திபன்
சி. நாகராசன்
துரை. வையாபுரி

★

திட்டச்சேரி :
9—12—56 மாலை 6 மணிக்கு
பிராக்கிராமம் தி. மு க துவக்க விழா
பேசுபவர்: மு. கருணாநிதி

★

புதுப்பட்டு:
9—12—56 மாலை 6 மணிக்கு
தி. மு கழகத் துவக்க விழா
தலைவர் : என். பொன்னுசாமி
பேசுவோர் :
இரே. இளம்வழுதி
கே. ஜி. சாமிநாதன்
டி. பி. கேசவன்
ந. நாச்சியப்பன்
ஜே. எச். பகதூர்

## கல்லூரிகளில் மாணவர் தொகை

டில்லியிடமிருந்து தகவல் இல்லையாம்

கல்லூரிகளில் 300-க்கு மேல் மாணவர் தொகை இருக்கக் கூடாது என்ற டில்லியின் திட்டம் பற்றி சென்னை சர்க்காருக்கு டில்லியிடமிருந்து தகவல் இல்லை என்று கல்வி மந்திரி சுப்பிரமணியம் பத்திரிகையாளரிடம் கூறியிருக்கிறார்.

வரையறுக்கப்பட்ட மாணவர் எண்ணிக்கையுடைய கல்லூரிகளைப் பெருக்குவதே, நல்லது — வரையறையின்றி மாணவரைச் சேர்த்துக்கொள்ளும் குறைந்த அளவு கல்லூரிகளைவிட, என்ற கருத்தில் தான் டில்லி ஒரு கல்லூரியில் மாணவர் எண்ணிக்கை 800-க்கு மேல் இருக்கக்கூடாது என்று யோசனை கூறியுள்ளார்கள் போலும் என்றும் நிதி மந்திரி கூறியிருக்கிறாராம்.

## இராமர் படத்தை எரித்ததற்கு தண்டனை

சிதம்பரம், டிச 6—

கடந்த ஜூலை மாதம், இராமர் படத்தை நகர மண்டபத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் கொளுத்தியதற்காக திரு எஸ். குருசாமியைப் போலீசார் கைது செய்து வழக்கு தொடர்ந்தனர்; நவம்பர் 6-ந் தேதியன்று அவருக்கு ரூ. 10 அபராதம் விதிக்கப்பட்டது; அபராதத் தொகையை அவர் செலுத்தவில்லை; எனவே, அவரைக் கைது செய்ய உத்தரவு பிறப்பிக்கப்பட்டு, நேற்று சிதம்பரம் சப்-மாஜிஸ்திரேட் முன் கொண்டு வரப்பட்டார்; அங்கு தோழர் குருசாமிக்கு இராமர் படத்தை எரித்ததற்காக 5 நாள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

மீன் துறையின்மூலம் நாட்டுக்கு ஆண்டிற்குச் சுமார் ரூ. 27 கோடி வருமானமாகக் கிடைத்துவருகிறது. இத்துறையில் மொத்தம் சுமார் 75,000 நாட்டுப் படகுகள் ஈடுபடுத்தப்படுகின்றன; மொத்தம் சுமார் 7,50,000 மீனவர்களுக்கு வேலைவாய்ப்பு கிடைத்துவருகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

